உ

குருவே நம:

# ஞானசுந்தரம்

இது

திருவாலவாய் யென்னும் மதுரை, கிருதமால்நதிக்கரையில்,

திருக்கொண்டெழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீபிரம்மானந்தசுவாமிகள்

பாரம்பரை,



மதுரையையடுத்த

வில்லாபுரத்தில் திருக்கோவிலுற்றிருக்கும்

## ஞானசுந்தரசுவாமிகளின் பேரில்

அவருடைய முக்கிய சிஷ்யர்களில் ஒருவரான

ராமநாதபுரம் ஜில்லா, கமுதக்குடி கிராமத்திலிருக்கும்,

**மா. குப்புஸாமி என்பவரால்**

பக்திமேலீடினால் தோத்திரபாக்களாக அப்போதைக்கப்

போது பாடப்பட்டுள்ளதை மற்ற சிஷ்யர்களான மதுரை

**B. சின்னசாமி நாயுடுகாரு**

விருப்பப்படி ஷை கிராமத்திலிருக்கும் ஷை சுவாமிகளின்

**சிஷ்யர் நா. முத்துராமலிங்கமய்யரால்**

ஒன்றுசேர்த்து,

பாளையங்கோட்டை பேத்தாச்சி பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது

1938



# முகவுரை

---

சமீவன க்ஷேத்திரமென்னும் கோவிலூரில் சமாதியுற்றிருக்கும் ஸ்ரீ முத்துராமலிங்கஞானதேசிகர் என்ற சுவாமிகளின் குருபரம்பரையாக வந்த திருவாலவாய் கிருதமால் நதிக்கரை மடத்தில் சமாதியுற்றிருக்கும் ஸ்ரீ பிரம்மானந்தசுவாமிகள் அனேகம் சிஷ்யர்களுக்கு சிரவணவாயிலாக ஞானோபதேசம் செய்து வந்தார்கள். அவர்களிடத்தில் முக்கிய சிஷ்யர்களாய் இருந்தவர்கள் பாலானந்தர், சுந்தபிர்மானந்தர், சங்கரானந்தர், அத்வைதானந்தர். ஷ பிருமானந்த சுவாமிகளின் விதேககைவல்யத்துக்குப்பிறகு பாலானந்தர் யென்பவர் சிலகாலம் இருந்து சிரவணம் நடத்தி வந்தகாலத்தில் இந்த ஞானசுந்தரம் என்பவர் அவரை குருவாக அடைந்து சிரவணம் கேட்டுவந்தார்கள்.

ஷ பாலானந்தருவுக்குப் பிறகு சுந்தபிர்மானந்தர், சங்கரானந்தர், அத்வைதானந்தர் இவர்கள் மூவரும் சகபாடிகளாகவும், இருவர்கள் சன்யாசிகளாகவும், சங்கரானந்தர் மட்டும் கிருகஸ்தாஸ்ரமியாகவும் இருந்து வந்தபோதிலும் ஷ சங்கரானந்தசுவாமிகள் வெகு சீக்கிரத்தில் சாக்ஷாத்காரமுற்று தன் சகபாடிகளுக்கும் இன்னம் அனேக சிஷ்யகோடிகளுக்கும் சிரவணம் நடத்தி வந்தார்கள். அந்தக் காலத்திற்றான் சௌராஷ்ட்டிர சிஷ்யர்களின் பொருளுதவியால் மடாலயத்துக்கு முன்பு, குருநாதன் சமாதியில் லிங்க பிரதிஷ்டை செய்து கோவில்கட்டி கும்பாபிஷேகமும் நடத்தப்பெற்றது. ஷ சங்கரானந்தசுவாமிகளின் சிஷ்யகோடிகளுள் தேர்ச்சியடைந்தவர்கள் அத்வைதானந்தம், ஞானசுந்தரானந்தம், பொன்னுசுவாமிஅய்யர் என்ற போதானந்தம், ஜெகனதய்யர், நாகசுப்பிரமணியய்யாராகிய நானும், முத்துபாரதி ஆகியவர்களும் சௌராஷ்ட்டிரர்களில் அனேகருமாவார்கள்.

இந்த ஞானசுந்தரானந்தம் என்பவர், பாலானந்தரை குருவாயடைந்தாலும், சங்கரானந்தரிடத்தில் தான் திடஞானம் பெற்றது. அவர் ஷயாரின் சகாபாடியான போதானந்தருடைய காலத்துக்குப்பிறகு மற்ற சகபாடிகளான ஜெகனதய்யர், நாகசுப்பிரமணியய்யர், இவர்கள் சேர்ந்து சல்லாபித்து வந்ததில் ஷ ஞானசுந்தரானந்தம் மட்டில் ஷ வில்லாபுரத்திலேயே இருந்துகொண்டு, வருகிற சிஷ்யர்களுக்கு ஞானோபதேசம் செய்துவந்தார். அப்படி ஞானோபதேசம் பெற்றவர்களில் ஒருவர் தான் இதை இயற்றியவர்.

இதில் சிற்சில யிடங்களில் எதுகை மோனை முதலியதுகளில் சிற்சில குற்றங்களிருந்தாலும், பிரதிபாதிக்கப்பட்ட வஸ்து சாஸ்திரங்களுக்கும் சுருதி ஸ்மிருதிகளுக்கும் அவைகளுக்கு ஆதாரமான ஈசுவரு திகளுக்கும் மேற்பட்டயிடமானதாலும், கர்த்திருத்துவமன்னியில், பக்தி பாவசத்தினுல் சொல்லப்பட்டதினுலும், அனுபூதிமயமாகவேயிருப்பதாலும் கொள்ளற்பாலதெனவே எமது துணிபு.

ஆகையால் அனுபூதிமான்களான ஞானிகளாலும், விசாரணையிலிருப்பவர்களாலும், வித்வான்களாக மட்டிலுமாயினும் இதைப் பார்த்து, குற்றம் குறைகள் சொல்லமாட்டார்களென்றே நான் நினைக்கயிடம்தருகிறது.

இப்டிக்கு

ஞானசுந்தர சுவாமிகளின் சகபாடியும்,

ஷை சங்கரானந்தர் சுவாமிகளின் சிஷ்யருமான

நாகசுப்பிறமணியய்யர்.

கமுதக்குடி.

## பரமகுரு வணக்கம்

சங்கரானந்தகுரு தாழ்கமலம் சூடினவற்க்
கெங்கும் பிரமமாய் இலங்குமே மங்காத
சச்சிதானந்தமதாம் சாக்ஷி தான் பிரமமென
நிச்சலமாய் நிற்பர் நிஜம்

குருவே நம :

சரும்புத்தோட்டத்திலே (என்ற மெட்டு)

வில்லாபுரந்தனிலே உயர் வில்லாபுரந்தனிலே
மூமுக்ஷுக்கள் எல்லோரும் வந்துய்யுமாரந்த (வில்லா)

(1) மானிடவடிவம், கொண்டு தனைவந் தடைந்தவர்
மந்தர்களானாலும், திருந்திடும்படியாய் ஐயன்
சிரவணமனன நிதித்தியாசனம், சாக்ஷாத்
காரமூடன் நித்தியசமாதியில் தன்னையே
நல்கிடும் வள்ளலாம் (வில்லா)

(2) பிரமோதூதவாண்டு, ஆனிமாதம்
பெருமைசேர் தேதிரெண்டில் கிருஷ்ணபக்ஷமும்
சோமவாரத்தினமாம், பஞ்சமியும்
சுபநக்ஷத்திரமவிட்டமும் கூடியநாளில், விதேக
முக்தி, தினமென நல்லடியார்களிடந்தனில்
சொல்லிய, வேளை தவறாமல் சமாதிக்கிவேண்டு
வனசெய்யத் தூண்டியமெய்யனும் (வில்வா)

(3) தேட்டமலிவுறவே, தேகசித்தியடையத்திரு
வுளங்கொண்டன்று
அந்திப்பொழுதினிலே சிஷ்ய அன்பர்களெல்
லோரும் வந்து குழுமிட, ஆலின்கிழ் அரனும்,
சனகாதி அன்பர்காய் வந்து உட்கார்ந்திட்ட
தன்மைபோல் மெஞ்ஞான சுந்தரனும்
கடாக்ஷவீக்ஷண்யத்தாலே நோக்கியதென்சொல்வேன் (வில்)

(4) தேங்காய்பழமுடனே சூடதீபாராதனையானதினோடு
அறிக்கைசெய்தபடி, யாவரும் ஆனந்தம்மானந்தம
மானந்தமென்றோத வீக்ஷணயப்பார்வையிலே ஐயன்
விதேககைவல்யமாகிய காக்ஷியை, வாக்கால் சொல்லத்
தரமோ, சன்னதிவந்துபணிந்தவர்பந்தம் விடுபடும் (வில்லா

தில்லைவெளியிலே (என்ற மெட்டு)

(1) சாதல்பிறத்தலெனுங்கேடு நீங்கிதன்னையறிய வென்றால்
நாதன் மெய்ஞ்ஞான சுந்தரன் பாதம்
நம்பித்தொழுவாயே (சா)

(2) என்றுமொருபடியாகி நிறைந்த
எந்தைகழல்பணிந்தால்
பொன்றுமுடம்பளவாகித் தவிக்கு நீ
பூரணமாவாயே (சா)

(3) ஒப்புவமையில்லா ஐயன் பதமலர்
ஓடியடைந்தாயேல்
இப்பிறப்பையொழித்துச் சுகவடிவின் பழுமாவாயே (சா)

(4) நில்லாத செல்வத்தை பொல்லா விஷயத்தை
நித்தியமென நினைந்தால்
சொல்லால் மனத்தால் தொடவரியசிவம்
தோன்றுமோ தோன்றாதே (சா)

(5) ஆறு சமயசாஸ்திர தர்க்கம்
அதிகம் படித்தாலும்
கூறுசாதனநாலுமின்றி முக்தி
கூடுமோ கூடாதே

(6) சிரவணமனனாதிகள் தேடி
தேசிகன்தனை அடைந்தால்
குரவன் கிருபையால் குறிக்கும் சிவபதம்
கூடும் சத்தியமே (சா)

---

கேதி நீ அல்லால் (என்ற மெட்டு)

பல்லவி

ஞானசுந்தர குருவே நம ஞான

அனு பல்லவி

ஆனந்த நமோ அருளே நமோ
மோனமெஞ்ஞான முடிவே நம ஸ்ரீ ஞான




சரணம்

நித்தனே நமோ முத்தனே நமோ
நிர்மலா நமோ நிர்த்தொந்தா நமோ
தன்னையே நல்கும் தயாசிந்துவே ஸ்ரீ ஞான
நாதனே நமோ போதனே நமோ
நான்மறைகள்தேடும் பாதனே நமோ
குப்பிஸாமி பிரீத சச்சிதானந்த ஸ்ரீ ஞான

---

கும்மி

குருபரம்பரை சொல்லிடுவோம் இன்ப
கூத்துகளாடியே துள்ளிடுவோம் முத்து
ராமலிங்கனைபாடிடுவோம் மோக்ஷ
ராஜயபட்டமும் பெற்றிடுவோம் குரு

அஸ்வத்காதத் திருமேனி மெய்
யன்பருளமாமுதக்கேணி தவ
சித்தியுமுத்தியும் தந்தருளும் ஞான
தேசிகனை தொழுதேத்திடுவோம் குரு

பிரம்மானந்தன் திருப்பாதம் அது
பேரின்பம் நல்கும் மெய்போதம் அடைந்
திம்மை மறுமை இன்னல் கழிவோம் நாம்
இப்பவே முத்திதனையடைவோம் குரு

பாலானந்தன் பாதமடி அது
பாவமெல்லாம் போக்குமடி தேடி
வாருங்கள் வாருங்கள் போவோமடி இன்ப
வாருதி தன்னிலே வீழ்வோமடி குரு

சுத்தபிர்மானந்த தெய்வமடி அது
சுகசுரூப வடிவமடி சொல்
மெத்தபேசி முடியாதடி சொல்லில்
மெய்பதத்தையளிக்குமடி குரு

சங்கரானந்தனின் பொற்கமலம் நிறை
சைதன்ய சாஸ்வத விமலம் அதை
சென்னியில் சூடப்பெற்றிடுவோம் நாம்
செத்துப்பிறப்பதை எற்றிடுவோம் குரு

மெஞ்ஞான சுந்தரனே திரு
மேனிசாத்தி வந்தவனே சென்னி
சுந்தரபாதம் வைத்தவனே எனை
சுகவடிவமாய் செய்தவனே குரு

---

பூமிமெச்சிடும் அண்ணுமலே (என்ற காவடிச் சிந்து

1. பூமிமெச்சிடும் வில்லாபுரந்தனிலே
பூரணன் புராதனன் கிருபாகரன் விமல
போதமேயருள் மேனியாகிவந்த புண்ணியன்
மிகு கெண்ணியன் பூமி

2. மூவரும் தேடிக்காணற்கரிதான மூர்த்தியே
மேனி சாத்தியே வந்த கீர்த்தியே விஷய
மோகத்தைத் தடுத்து முத்தியைக்கொடுக்கும்
முதல்வனே அருள் முனிவனே பூமி

3. கோவில்கொண்டெழுந்து லிங்கரூபமான
கோலமே சமாதிமூலமே எந்த நாளுமே வழி
கூடிவந்தவர்க்கு முக்திசுகமது
கூடுமே கைகூடுமே பூமி

4. குப்புஸாமி சின்னஸாமி முத்துராமலிங்கமன்பர் கூடியே
உனைநாடியே அடிசூடியே அருள்
குரவனே நினது சிரவணதிவழி கொண்டனர்
முக்தி கண்டனர் பூமி

---

கந்தா காருண்யனே (என்ற மெட்டு)

பல்லவி

ஞானசுந்தரனே உனை நம்பினேனே ஞான

அனு பல்லவி

மோனமொழியானே முத்தி முதலோனே ஞான
அரிபிரமனாதி தொழும் அய்யனே —யருள் மெய்யனே
நான்மறை முடிவே எந்தன் நாயகனே
அன்பேயருள்வடிவே எனையாள்பரனே ஞான

மூலமாய் முடிவாய் முடிவிலா முத்தனே பரி சுத்தனே
ஞாலமெலாமாகி நின்றிடு நத்தனே யருள் நித்தனே

வார்த்தை யொன்றாலே, வன்பவம் தீர்த்தாய்,
தோத்திரமறியேன், முக்திவீடளிப்பாய், ஞான

---

யெங்களது நாடு (என்ற மெட்டு)

1. ஆதியந்தமேதுமிலா வானந்தத் தெய்வம்
ஆங்காரமோகங் கெடவடிதந்த தெய்வம்

2. அடியவர்கள் மிடிதீர அருள் கொடுக்கும் தெய்வம்
படிமிசை திருமேனி பற்றிநின்ற தெய்வம்

3. தேவர்களும் மூவர்களுந்தேடி நிற்குந் தெய்வம்
தெரிசித்து நின்றவரின் தேட்டநல்குந் தெய்வம்

4. வில்லாபுரத்தெழுந்த மெய்ஞானத் தெய்வம்
வினைதுடைத்து வீடளிக்கும் விமலபோதத் தெய்வம்

5. இப்பவமறுத்து நித்ய இன்பநல்குந் தெய்வம்
குப்புஸாமி தனக்குகந்த குருநாதத் தெய்வம்

---

ஆனந்தக்களிப்பு

வல்லாளன் என் குருநாதன் ஒரு சொல்லாலே
துக்கம் துடைத்திடும் நீதன் வல்

வில்லாபுரந்திலெழுந்து அவன் சல்லாபத்தாலே
யென்னை இழுத்தாண்டி வல்

2. எங்கும் நிறைந்த எனையன் ஓர் அங்காதத்தினி
லேரியமாந்து எங்கே எனத்தேடிவந்து எனை
இன்பமாம் வெள்ளத் திருத்திவைத்தாண்டி. வல்

3. எந்தவிதந்தனிலின்பம் அவன் தந்து உதவிய
தன்மையை நோக்கில்
பந்தத்தாலாகிய சிந்தை தனைபாங்குடன் உள்ளிலே
தாங்கி விட்டாண்டி வல்

4. தாகமாய் சத்துருவவிர்த்தி அதுவேகமாய் நேதியால்
சோதியில் பற்றி போகத்திற் கிட்டியயின்பம்
அத்தைபுகலமுடியாத பூரணம் தோழி வல்

5. தன்னையே தானுக்கண்டு ஒளிர்சர்வமும் தன்மயமானது
கொண்டு எண்ணுணு ஆனந்தமுண்டு அவன்
இணையடிமறவாதுதொழ நன்று தோழி வல்

---

அய்யாபழனிமலை வேலா (என்ற மெட்டு)

பல்லவி

வில்லாபுரத்தெழுந்த மெய்யா அருள்
மெஞ்ஞானசுந்தரத் தய்யா வில்

அனு பல்லவி

நல்லன்பர்பொருட்டு வந்ததய்யா நம்பின
நான் சொல்லுவதிலென்ன பொய்யா வில்

சரணம்

அன்னமயமான திந்தத்தூலம் நானென
அபிமானித்தேனனந்த காலம் ஜகத்
தென்னுமிந்த சொற்பனத்தின் கோலம்சிக்கி
எத்தனையோ ஜன்மம் வந்தாலும் வில்

என்ன புண்ணியமறியேனே உன்
இணையடி தொட்டு நின்றேனே நம்பி
தன்னையறிந்துகொண்டேனே தினம்
தாண்டவமாடுகின்றேனே வில்

தப்பிதம் தவிர்த்தாண்ட நாதன் விமல
சர்வபரிபூரண மெய்ப்போதன் பொன்னடி
குப்புஸாமிக்களித்த நீதன் திரு
கோவில்கொண்ட குருநாதன் வில்

---

கிளிக்கண்ணி

1 பிரமமெனும் ராஜனுக்கு பெரியபொய்யொரு பெண்டாட்டி
இரண்டுபேரில் சிறுபொய், கிளியே, இளையவளாகுமடி

2. மாயை அவித்தையென மனைவியர்களின் பெயரும்
சேயைச் சொல்லப்புகுந்தால், கிளியே, சிறிப்பாயிருக்குமடி

3. மூத்தமனைவியர்க்கு வாய்த்தமகன்ஈஸ்வரனே
ஆத்தாள் அவித்தையர்க்கு, கிளியே, அருமை மக்கள்
ஜீவர்களாம்

4. ஈஸ்வரன் என்பவனும் இளவரசு பட்டமேற்று
சாஸ்வத சுதந்திரத்தால், கிளியே, சகலமுமறிந்தானடி

5. ஜீவசிதாபாசனுக்கு தீர்க்கவியாதி கண்டு
ஆவரணமறைப்பால், கிளியே, அவிந்ததுவே ஞானகண்கள்

6. சரீரமே நானெனவும் ஜகம் சத்தியமெனவும்
விரிவாய்துக்கங்கொடுக்கும்கிளியே விஷயத்திலேயலேந்தேன்

7. எத்தனையோ கோடிஜென்மா எடுத்தேதோ புண்ணியத்தால்
சித்தசுத்தியானதினால், கிளியே, நித்யவஸ்து தேடிநின்றேன்

8. ஞானசுந்தர குருவின் நளினமலர் பாதம் நம்பி
ஆனந்தமானேனடி, கிளியே, அல்லலகன்றேனடி

9. பெத்தனெனத் தோற்றம் பிரமையென வரிந்து
சித்தசங்கல்ப்பம்விட்டு கிளியே சின்மயமாயானேனடி

10. பஞ்சபூதமுமல்ல பரிப்பாம் ஜகத்துமல்ல
அஞ்சாதே தேகமல்ல, கிளியே, அறிவே நீ என்றாரடி

11, தேகாதிகள் முதலாய் திரிசயமெலாம் பிரட்டே
மோகாதியை நீ விட்டால், கிளியே, முத்திசித்தமென்றாரடி

12. மோனமென்றும் ஞானமென்றும் முத்தியென்றும்சொல்வ
தெல்லாம்
தானாகும் பூரணத்தில், கிளியே, சத்தியமாயில்லையென்றார்

13. சாத்திரங்கள் பார்த்து சகலமறிந்தாலும் சின்
மாத்திரமாய் நிற்கக்குரு, கிளியே; மலரடிகள் வேணுமெ
ன்றார்

14. ஆகாசதைப்போலே அகண்டமாய் நின்றவர்க்கு
போகாதி இச்சை யெங்கே, கிளியே, போக்குவரவு மெங்கே

15. சந்ததமுமானந்த தாண்டவதில் நிற்பவர்க்கு
பந்தமோக்ஷமில்லையடி கிளியே அப்பாவனையுமில்லையடி

16. மூன்றுஅவஸ்தைகளும் மூலனோடு கூடியதாய்
தோன்றிமறையுமடி கிளியே தொந்தமுனக்கில்லையடி

---

என்ன சொல்லுவாய் மனமே எமனிடத்தில் ஏது சொல்லுவாய் மனமே (என்ற மெட்டு)

பல்லவி

திருப்திகொண்டிருமனமே எப்போதும் நீ திரு

அநுபல்லவி

ஜீவேஸ்வர ஜகத்து கானலெனவே மதித்து திரு

சரணம்

சரீரமே நானெனத் தமுக்குகளடித்தாய்
சாதல்பிறத்தலெனும் சுழல்சிக்கி கெடுத்தாய்
ஏதோ புண்யவசம் வில்லாபுரமடுத்தாய்
எந்தை சுந்தரனிரு பதமலர்பிடித்தாய் திரு

அயன்முதலெறும் பீருய்த்தேகங்களெடுத்து
அதிலுறுமிருவினை போகங்கள் தொடுத்து
சுகலேசமிலையென துடிவெகு துடித்து
துரிதமாய் உடல்பொருளாவியைக் கெடுத்து திரு

சாதனசதுஷ்டய மடையவும் பெற்று
சாதுக்களோடு சல்லாபிக்கக் கற்று
பகிர்முகமனமது நிர்மலமுற்று
பரமானந்தமாய் சர்வமுமற்று திரு

தத்துவமசியெனும் சிரவணம் நண்ணி
சங்கையறமனனாதிகள் பண்ணி
அதுவந்நது நானாவது குன்னி
அதுமாத்திரமாய் மிஞ்சுவதெண்ணி திரு

அப்பியாசவாக்யம் பிரஞ்ஞானம் பிரமம்
அரிவேதானுகவாவது கிரமம்
சாதுக்களன்னியில் நிலைப்பது சிரமம்
சர்ஜனருறவது தவிர்க்கொணு மருமம் திரு

அகம்பிர்மாஸ்மியெனுமாஹாவாக்யம்
அனுபவம் பிரமமாயாவது சிலாக்யம்
தடையற்றவானந்த சரளமே சௌக்யம்
தடுத்தாண்ட சுந்தரன் தருவாரிப் பாக்யம் தி

அயமாத்மாபிரமமெனுமாரூட வாக்யம்
அயனரிசிவன் முதல் விரும்பிடு பாக்யம்
சகஜசமாதியே இதுவெனல் யோக்யம்
தத்துவமசியாதி நான் மஹா வாக்யம் தி

---

சோமசுந்தரே (என்ற வர்ண மெட்டு)

1. ஞானசுந்தரனே நினை
நம்பினேனே அன்பர்கோனே ஞா

2. பெண்டுபிள்ளை சுத்தமெனும் பாசம்
பேனும் செல்வமெலாம் பெருமோசம்
கண்டுகொள்ளய்யோ பகல்வேஷம்
கானல்போல தோனுமென்றுபதேசம் ஞா

3. ஒன்பது வாசலுடைய வித்தேகம்
ஊற்றைசேர்மல நாற்றத்தில் மோகம்
இன்பமேது நாமரூபத்தின் யோகம்
எல்லாமாயமென்றுபாயம் ஞா

4. ஓடுமனமது உன்னிடம் நின்று
உன்முகமாகவே சேதியில் சென்று
கூடினலாத்மஜோதியில் நன்று
கூறினபொன்மொழி தேருதல்கொண்டு ஞா

மூர்த்தியே நீ பேரின்பம்காட்டி
முத்திக்கரசனுப் முடிசூட்டி
கீர்த்தியாயிதை கன்னிலை நாட்டி
கிருபைசெய்த குருவே பரமேட்டி ஞா

